

# பிரதிவாதி பயங்கரம் அண்ணன் அருளியது

## மணவாளமாமுனிகளைப் பற்றிய வாழிதிருநாமப் பாசுரம்:

செய்யதாமரைத் தாளிணை வாழியே
சேலை வாழி திருநாபி வாழியே
துய்யமார்பும் புரிநூலும் வாழியே
சுந்தரத்திருத் தோளிணை வாழியே
கையுமேந்திய முக்கோலும் வாழியே
கருணை பொங்கிய கண்ணிணை
வாழியே
பொய்யிலாத மணவாள மாமுனி
புந்தி வாழி! புகழ் வாழி வாழியே!

# முன்னுரை

திருமாளிகை என்ற சொல்லைத் திரு•மாளிகை என்று பிரித்தால் செல்வம், (ஸ்ரீ) நிறைந்த மாளிகை என்று பொருள் கொள்ளலாம். நம் முன்னோர்கள் எழுதிய நூல்களெல்லாமே புத்தக வடிவில் வரவில்லை. எழுதிய ஓலைச் சுவடிகளாகவே இன்றும் உள்ளன. சென்னை அரசினர் கீழ்த்திசைச் சுவடி நூலகத்தில் பல வகையான அரிய ஓலைச்சுவடிகள் பாதுகாக்கப்பட்டுவருகின்றன. அந்த சுவடிக் கடலிலிருந்து டாக்டர் ஸ்ரீமான் M.A. வேங்கடகிருஷ்ணன் ஒரு சுவடியை நிதியாகக் கண்டெடுத்தார், அது ஒரு வியாக்யானச் சுவடி மிகப்பழைய சுவடி. அதில் காணப்பட்ட செய்தி:-

ஒரு காலத்தில் திருநாங்கூர் பிரதிவாதிபயங்கரம் திருமாளிகையினர் 'பட்டோலை' என்ற நூலை வெளியிட்டுள்ளனர் அதில் ஆசாரியர்களின் திருநாமங்களும், அவர்கள் செய்த நூல்களும் குறிப்பிடப்பட்டுள்ளன. அதில் பிள்ளைலோகம் ஜீயர் அருளிச்செய்த நூல்களைக் குறிப்பிடும்போது, 'செய்யதாமரைத் தாளிணை'க்கு இவர் வியாக்யானம் அருளியதாகக் குறிப்பிடப் பட்டுள்து. இதுவரை காணாத கேளாத வெளிவராத இந்த வியாக்யானம் முதன்முதலில் பிள்ளைலோகம் வம்சஸ்தர்கள் ட்ரஸ்ட் வெளியிட்ட 'கடல் மல்லைக் கரும்பு' என்ற நூலில் டாக்டர் M.A.வேங்கடகிருஷ்ணன் ஸ்வாமியினுல் வெளியிடப்பட்டது. இந்த நிதியை மீண்டும் திருநாங்கூர் பகுதிக்கே கொண்டு செல்லவேண்டும் என்ற நோக்கம் அடியேனுக்கு இருந்தது. திருநாங்கூர் திவ்யதேசங்களுள் ஒன்ருன திருவெள்ளக்குளம் எனப்படும் அண்ணன் கோயிலில் ஸ்ரீஅண்ணன்பெருமாளை விட்டு வேறு எங்கும் வராமல், அவருக்கு வாசிக மாநஸ சரீரம் ஆகிய த்ரிகரணங்களாலும் கைங்கர்யங்கள் செய்து கொண்டு எழுந்தருளி இருப்பவர் பிரதி வாதிபயங்காம் திருவேங்கடாசாரியார் ஸ்வாமி. இந்த ஸ்வாமி ஸ்ரீஅண்ணன் பெருமாளின் திவ்ய கடாக்ஷத்தாலும், ஸ்வாமிகளின் திவ்யாநுக்ரஹத்திலுைம், நாளது ஆடி மிருகசிர்ஷத்தில் 91வது திருநக்ஷத்திர நன்னாளைத் தொடங்குகிருர். இந்நன்னுளில் ஸ்ரீவைஷ்ணவர்கள் சேர்ந்திருக்கும் கோஷ்டியில் இந்நூலே வெளியிடுவது மிகவும் பொருத்தமாகும் என்று மிகவும் அருமையான இச்சிறு நூலே வெளியிட்டு

ஆழ்வார்கள்வாழி அருளிச் செயல்வாழி
தாழ்வாதுமில் மறையுடனே வாழி- வ்ாழியெனும்
வாழ்வே உயர்ந்ததெனக் கூறும் திரு
வேங்கடவர் வாழி வாழி! என்று வாழ்த்துவம்

பிள்ளைலோகம் ஸ்தலசயனத் துறைவார்

வித்வான், நியாயசிரோமணி,
பெருமாளகோவில் யதிந்த்ரப்ரவண ப்ரபாவம்

# பிள்ளைலோகம்
# ஸ்ரீ. உ. வே. ஸ்தலசயனத்துறைவார் ஸ்வாமி
# எழுதியது

**செய்யதாமரைத்தாளிணை வாழியே:-** ஸௌந்தர்யம் கல்யாணகுணங்கள் ஆகியவற்றின் இருப்பிடமான மணவாளமாமுனிகளைப் பாதாதிகேசம் பரிவுடன் மங்களாசாஸனம் செய்கிறார் பிரதிவாதிபயங்கரம் அண்ணா. இவரை 'செய்யதாமரை பாடிய சிரண்ணன்' என்று பெரியோர் புகழ்வர். மணவாளமா்முனிகளின் திருவடிகளைப் பொன்னடியாம் செங்கமலம் என்று அனைவரும் கூறுவர். பிள்ளைலோகம் ஜீயர் 'பொன்னடியாம் செங்கமலப் போதுகள்' என்கிறார். 'இன்புறும் தொண்டர் சேவடி ஏத்தி வாழ்த்தும் என்னெஞ்சமே' என்னும் படி அடியார்களின் திருவடிகளை ஏத்துவதே நிலை நின்ற ஸ்வரூபம். இவர் மணவாளமாமுனிகளின் திருவடிகளில் ஈடுபடும் படியாக அத்திருவடிகள் அழகும் நிறமும் கொண்டு போக்யமாய் உபாய பூர்த்தியையும் உடையதாய்த் இருக்கின்றன.

'அடியைத் தொடரும்படி' இவருக்கு 'ராக ஸௌமநஸ்ய பத ஸௌப்ராத்ரங்கள் உண்டாயிற்று' என்கிறார் ஜீயர்.

திருவடிகள்: ராகம் = சிவப்பு, பதம் = திருவடிகள் ஸௌப்ராத்ரம் = (அவற்றின்) சேர்த்தி.

**அண்ணாவின் சொற்கள்:-** ராகம் = அன்பு, பதம் = அடி சொற்கள், ஸௌப்ராத்ரம் அவற்றின் சேர்த்தியழகு.

**மணவாளமாமுனிகளின் இணையடிகளின் இணையில்லா அழகுக்கு ஏற்றவாறு இவரது அன்பு கூர்ந்த மங்களாசாஸன வாக்கியமும் அமைந்து பரிமளிக்கிறது.**

**சேலை வாழி திருநாபி வாழியே!:-**

திருவரையில் பாங்காக ஆஜங்கம் (முழங்கால்) தழைத்துடுத்த திருப்பரிவட்டத்தின் அழகில் திருவுள்ளம் சென்று மங்களத்தை ஆசாஸிக்கிறார்.

'சந்திரனைச் சூழ்ந்த பரிவேஷம் போலே ஆயிற்று திருவரைக்குத் திருப்பரிவட்டத்தோடே சேர்த்தி. ஸுதாநிதிமிவஸ்வைர ஸ்வீக்ருதோதக்ரவிக்ரஹம்' என்னக்கடவதிறே என்கிறார் ஜீயர்.

மணவாளமாமுனிகள் காஷாயம் அணிந்திருக்கும் அழகு, சந்திரனைச்சுற்றி ஒளிவட்டம் இருப்பது போல் சுற்றும் ஒளிவட்டம் சூழ்ந்து சோதி எங்கும் பரந்துள்ளது என்கிறார்.

'அந்திபோல் நிறத்தாடையும்' என்றதும் 'உந்தி மேலதன்றோ' என்று ஆழ்வார் பகவானிடம் ஈடுபட்டது போல், ஸௌந்தர்ய ஸாகரம் இட்டளப்பட்டுச் சுழித்தாற்போல் இருக்கிற நாபியின் வைலக்ஷண்யத்தைக்கண்டு, சேலை வாழி திருநாபி வாழியே என்றார்.

மடவார்களின் உந்திச் சுழியிலே சுழலும் மநஸ்ஸை மீட்டுத் தன்னிடத்திலே ஆழங்காற்படுத்தவல்லது மணவாள மாமுனிகளின் திருநாபி.

துய்யமார்பும் புரிநூலும் வாழியே!:-

திருநாபிக்கு மேலாய் விசாலமாய் விமலமாய் ஸுந்தரமாய் இருக்கிற திருமார்பையும் அதனோடு சேர்ந்த திரு யஜ்ஞோபவீதத்தையும் கண்டு காப்பிடுகிறார்.

மார்புக்குத் தூய்மையாவது:- 'நெஞ்சத்துப் பேராது நிற்கும்' பெருமானைக் கொண்டிருப்பது. அத்தால் ஹ்ருதயம் ஸௌம்ய ரூபமாய் இருக்கிறது. 'கேசவன் முதலான பன்னிரு திருநாமங்களில் மாதவனின் இடம் மார்பு' 'மார்வமென்பதோர் கோயில் அமைத்து மாதவன் என்னும் தெய்வத்தை நாட்டி' என்றார் ஆழ்வார். திருவுக்கு இடமாய்த்து பகவானின் திருமார்பு; திருமாலுக்கு இடமாய்த்து ஆசாரியரின் திருமார்பு, ஆச்ரிதர்களுக்கு நன்மையையே சிந்திக்கும திருமார்பு, சோபிதம் யஜ்ஞ ஸூத்ரேண என்று' திருமார்வோடு சேர்ந்திழக்கும் யஜ்ஞோபவீதம், இதற்கு முந்நூல் என்று பெயர். இதுவே மெய்ந்நூல், இது பொய்நூல்களையும் கள்ள நூல்களையும் உண்மையன்று என்று உணர்த்துகிறது. துய்யமார்புக்கும் முப்புரிநூலுக்கும் பல்லாண்டு.

சுந்தரத்திருத்தோளிணை வாழியே:- 'மந்தரம் நாட்டி மதுரக் கொழுஞ் சாறு கொண்ட சுந்தரத் தோளுடையான' என்று ஆண்டாள் திருமாலிருஞ்சோலை அழகரிடம் ஈடுபட்டார். மறைப் பாற்கடல் கடைந்து மெய்ப்பொருள் உணர்த்தி தத்துவப் பொருளைக் காட்டிய அழகிய மணவாள மாமுனிவரின் தோள் அழகிலே ஈடுபடுகிறார் அன்று சுந்தரத்திருத்தோளிணை வாழியே என்கிறார். 'தோள் கண்டார் தோளே கண்டார்' என்னும்படி அழகு நிறைந்து கண்டவர்தம் மனம் கவரும் காண் தகு தோளன்னல் மாமுனிகள்.

**கையுமேந்திய முக்கோலும் வாழியே:-** அவ்வோ காலங்களில் சாஸ்திரப்ரமாணங்களினால், உபய விபூதி நாயகனை ஸர்வரக்ஷகனையும் ரக்ஷிக்கும் திருத்தோள்கள். சங்குசக்கர அடையாளங்களால் விளங்கும் திருத்தோள்கள். தொண்டக்குலத்திற்குத் தமிழ்வேதமான திருவாய்மொழியின் அர்த்தத்தை உபதேசிக்கும் போது காட்டும் ஹஸ்தமுத்திரை (ஞானமுத்திரை) உந்நித்ரபத்மஸுபகாம் உபதேசமுத்ராம் என்ற உபதேச முத்திரையோடு கூடின திருக்கையும், பாஷண்டிகளுக்கு வஜ்ரதண்டமாயும், வேதாந்தஸார ஸூக்ஷ தர்சன தீபதண்டமாயும் இருக்கும், தத்வ த்ரயத்தை விளக்கும் த்ரிதண்டத்தைக் கையில் ஏந்திய அழகும் பல்லாண்டு கூறச்செய்கின்றன. 'கையுமேந்திய முக்கோலும்' வாழியே என்றார்.

**கருணை பொங்கிய கண்ணிணை வாழியே!:-**

'ஸ்மயமான முகாம் போஜம் தயமாநத்ருகஞ்சலம்' என்னும்படி கருணை பொழியும் திருக்கண்கள். அலர்ந்த தாமரைப்பூவில் இரண்டு வண்டுகள் அமர்ந்திருப்போல், புன் முறுவலோடு கூடின தாமரை போன்ற முகத்தில், திருவுள்ளத்தில் பொங்கும் கருணையை வெளிப்படுத்தும் திருக்கண்கள். கண்ணுக்கு அழகு கருணையுடன் காணல், இவர் மணவாளமாமுனிகளின் கண்களில் தோற்று ஜிதம் தே புண்டரீகாக்ஷ' என்கிறார்.

'கட்கண்' என்றும் 'உட்கண்' என்றும் க்ண்கள் இருவகை. 'நேத்ரேண ஜ்ஞாநேந' என்று ஜ்ஞாந சக்ஷுஸ்ஸுகளைக்

கொண்டவர் என்றும் பொருளாகும். இதனால் ஸ்வரூபவைலக்ஷண்யமும், ஜ்ஞாந வைலக்ஷண்யமும் சொல்லப்பட்டதாயிற்று.

**பொய்யிலாத மணவாள மாமுனி புந்தி வாழி!:-**

மாமுனிகள் விஷயத்தில் சொன்னவை எல்லாம் யதார்த்தமானவை. 'காமாதி தோஷஹரம் ஆத்மபதாச்ரிதாநாம்' என்று ஆச்ரிதர்களை அஸத்வாதி தோஷங்கள் நெருங்காமல் இருக்கும்படி கடாக்ஷிப்பவர். பொய்யிலாத என்பது புத்திக்கு விசேஷணம். 'இராமாநுசன் மெய்ம் மதிக்கடலே' என்கிறபடி உண்மை நல் ஞானமான யதார்த்த (மெய்) ஞானத்தை உடையவர் என்று பொருள்.

மணவாள மாமுனிகளின் ஜ்ஞாநம் அதிவிலக்ஷணம். தத்வத்ரயங்களையும் காணவல்லது. 'ஒண் தாமரையாள்கேள்வன் ஒருவனையே நோக்கும் உணர்வு' என்கிறபடி ச்ரிய: பதியை விஷயமாக உடையது.

நிறை ஞானத்தொரு மூர்த்தியான ஸ்ரீதாசார்யனோடு ஒப்பிட்டு சொல்லவல்ல ஜ்ஞாந நிதி நம் மணவாள மாமுனிகள். இவரது ஞானம் கலிதோஷம் தட்டாமல் நித்ய ஸ்ரீர் நித்ய மங்களமாகச் செல்ல வேணும் என்று வாழ்த்துகிறார்.

**புகழ்வாழி வாழியே:-**

ஜ்ஞான வைபவத்தால் வந்த புகழ்:- 'தொல் புகழ் கடர்மிக்கெழுந்தது' என்றபடி எல்லை இல்லாத பேரொளியுடன் ஒரு குறையும் இன்றி வாழவேண்டும் என்கிறார்.

பல்லாண்டு பல்லாண்டு புகழுக்கு ஆதாரமாய், ஆத்ம ஸ்வரூப வைலக்ஷண்யமும் எப்போதும் விளங்க வேண்டும் என்று மங்களாசாஸனம் செய்கிறார். சரம பர்வரான மணவாள மாமுனிகள் விஷயத்தில் மங்களாசாஸனம் செய்வதே நம் கடமையாகும்.

பிரதிவாதி பயங்கரம் அண்ணன் அருளிய மணவாள மாமுனிகளின் பாதாதி கேச மாலையில் உள்ள கடைசிப்பாசுரம்:

வாழி செந்தாமரைத்தாள் துவராடை மருங்கு கொப்பூழ்
வாழி முந்நூலுறை மார்பு முக்கோலங்கை வாழி திண்டோள்
வாழி செவ்வாய் விழிவாழி பொன் நாமம் மருவு நுதல்
வாழி பொற்கோயில் மணவாள மாமுனி வாழ்முடியே.

மணவாள மாமுனிகளின் திருவடிகள் வாழி! துவராடை வாழி! இடை வாழி! திருநாபி வாழி! யஜ்ஞோப வீதம் விளங்கும் திரு மார்பு வாழி! முக்கோல் ஏந்திய திருக்கை வாழி! தோள்கள் வாழி! பவளச் செவ்வாய் வாழி! திருக்கண்கள் வாழி! ராமாநுஜ திவ்யோர்த்வ புண்ட்ரம் வாழி! திரு நெற்றி வாழி! பொன் அரங்கின் மணவாள மாமுனிகள் வாழியவே!

# செய்யதாமரைத் தாளிணை வ்யாக்யானம்

श्रीमते रम्यजामातृमुनये विदधे नमः ।
यत्स्मृतिस्सर्वसिद्धीनामन्तरायनिवारिणी ।।

ஸ்ரீமதே ரம்யஜாமாத்ரு முநயே வித3தே4 நம:
யத் ஸ்ம்ருதிஸ் ஸர்வஸித்3தீ4நாம் அந்தராய நிவாரிணீ।।

ஸ்ரீஶைலேஶ த3யாபாத்ரமென்று தொடங்கி அருளிச் செய்த ஸேனை முதலியார் நாயனார், ஜீயருடைய கல்யாண கு3ணங்களிலே தோற்று அடிமைபுக்கபடியை ப்ரகாஶிப்பிக்கிறாராய் நின்றார். அவர்தம்மடியரான இவரும் அக்கு3ணங்களுக்கும் ஸௌந்த3ர்யாதி3களுக்கும் ஆஶ்ரயமான தி3வ்யமங்க3ளவிக்3ரஹத்திலே ஈடுபட்டு, பாதாதிகேஶாந்தமாக அநுப4வித்துத் தம்முடைய பரிவின் மிகுதியாலே மங்க3ளாஶாஸநம் பண்ணினபடியை அடைவே அருளிச் செய்கிறார் இதில். 'செய்யதாமரை பாடின சீரண்ணன்' என்றிறே இவர்க்கு நிரூபகம். இப்படி மங்க3ளாஶாஸநம் பண்ணுகிறவர் தம்முடைய ஶேஷத்வாநுகுணமாக 'உன் பொன்னடி வாழ்க' என்னுமா போலே பொன்னடியாம் செங்கமலப் போதுகளுக்கு முந்துற மங்க3ளாஶாஸநம் பண்ணுகையிலே ப்ரவ்ருத்தராகிறார்.

(செய்யதாமரைத் தாளிணை வாழியே) ப்ரஜை முலையிலே வாய் வைக்கும் ★நாண்மலராம் அடித்தாமரை★ இவையாய்த்து. ★உன் இணைத் தாமரைகட்கு அன்புருகி நிற்குமது★ என்கிறபடியே இதுவும் ஸ்வரூபமாயிருக்கும். ★இன்புறும் தொண்டர் சேவடியேத்தி★ வாழ்த்துகையிறே நிலை நின்ற ஸ்வரூபம். (செய்ய தாமரைத் தாளிணை வாழியே) இவர் ★அடியைத் தொடரும்படி★ ராக3ஸௌமநஸ்ய பத3ஸௌப்4ராத்ரங்கள் உள்ளதாற்று, அதாவது அழகிதாய்ச் சிவந்த செவ்வித்

தாமரைப் பூப்போலே த₃ர்ஶநீயமுமாய் போ₄க்யமுமாய்த் தாமரைப் பூவை நிறைத்து வைத்தாப்போலே சேர்த்தி யழகையுமுடைத்தாய் உபாயபூர்த்தியையும் உடைத்தா யாய்த்துத் திருவடிகளிருப்பது. ★உந்மீலத் பத்ம க₃ர்பே₄த்₃யாதி₃. ★போதச் சிவந்து பரிமளம் வீசிப் புதுக்கணித்த சீதக் கமலத்தை நீரேறவோட்டி★ என்றும், ★சீராரும் செங்கமலத் திருவடிகள் வாழியே★ என்றுமிறே அடியறிவார் வார்த்தை. இப்படி இதனுடைய ஸௌந்த₃ர்யத்தையும் போ₄க்யதாப்ரகர்ஷத்தையும் அநுப₄வித்த இவர் மங்க₃ளாசாஸநம் பண்ணியல்லது நிற்கமாட்டாரே. ★உன் சேவடி செவ்வித் திருக்காப்பு★ என்னுமாபோலே. அன்றியே செய்ய என்கிற இத்தால் திருவடிகளுடைய செவ்வியைச் சொல்லிற்றாய், ஆஶ்ரிதளவும் வந்து செல்லுகிற வாத்ஸல்யத்தையுடைத்து என்கை. இது அண்ணராய சக்ரவர்த்திக்குப் ப்ரத்யக்ஷம். முதலடியிலேயிறே எழுந்து ரக்ஷித்தருளிற்று. ★வந்தருளி என்னை எடுத்த மலர்த்தாள்கள் வாழியே★ என்கிற படியே தம்மையும் முந்துற வந்து விஷயீகரித்தது திருவடிகளாயிற்று. ★திருக்கமலபாதம் வந்து★, ★அடியேனை அங்கே வந்து தாங்கு தாமரையன்ன பொன்னாரடி★ என்னக் கடவதிறே. இவரிப்படித் தம்மை விஷயீகரித்த செய்ய தாமரைத்தாள்களைக் கொண்டு சென்னித் தரிக்கும(து)ளவா யிருக்கிற பொற்காலானது நம் சென்னித் திடரிலே யேறும்படி அருளாலே வைத்தருளுவதே என்று அவற்றினுடைய பாவநத்வ போ₄க்₃யத்வங்களை யநுப₄வித்து அவற்றுக்குத் தம்மோட்டை ஸம்பந்தத்தாலே ஓர் அவத்யமும் வாராதொழிய வேணும் என்று மங்க₃ளாஶாஸநம் பண்ணுகிறாராகவுமாம். ஆகையாலிவர்க்குப் ப்ராப்ய ப்ராபகங்கள் இரண்டும் அடிதானேயாயிருக்கை.

இனித் திருவடிகளுக்கு இவ்வருகு கந்தவ்யபூமி யில்லாமையாலே (மேலே) திருவரையோடே சேர்ந்து சிவந்து நிற்பதான திருப்பரியட்டத்திலழகிலே சென்று அச்சேர்த்திக்கு (மங்களத்தை) ஆமாஸிக்கிறார் 'சேலை வாழி' என்று. கால் வாசியிலே நில்லாமல் அரைவாசி தேடுமவரிறே. ★திருவரையில் சாத்திய செந்துவராடை வாழி★ யென்று திருவரையில் உடையழகும் பரபாகமாயிறே யிருப்பது. சந்த்ரனைச்சூழ்ந்த பரிவேஷம் போலேயாயிற்றுத் திருவரைக்குத் திருப்பரியட்டத்தோடே சேர்த்தி. ★ஸௌதாநிதிமிவ ஸ்வைர ஸ்வீக்ருதோதக்ர விக்ரஹம்★ என்னக்கடவதிறே. ★ஈனமிலாத இளநாயிறாரும் எழிலும் செக்கர்வானமுமொத்த துவராடையும்★ என்றும், ★ஆதாம்ரவிமலாம்பரம்★ என்றும் அத்யாஶ்சர்யமாயிறே இருப்பது. இத்தால் ★பீதகவாடைப் பிரானார் பிரமகுருவாகி★ வந்தமை தோற்றுகிறது. அதுக்கு மேலே கண்டவர்களைக்கால் தாழப் பண்ணவற்றான திருநாபியழகிலே போந்து அவ் வழகுக்குப் போற்றி யென்கிறார். (திருநாபிவாழி) யென்று. திருப்பரியட்டத்துடனே சேர்ந்திறே திருநாபி இருப்பது. ★அந்திபோல் நிறத்தாடை★ என்றவநந்தரம் ★உந்தி மேலது அன்றோ★ என்றருளிச் செய்கிறார். அதுதான் அல்லாத அவயவங்களைக் காட்டில் அழகியதாய், ★அழகாற்றில் திகழ்சுழி போலேயிறே உந்திச்சுழியிருப்பது. ஸௌந்தர்ய ஸாகரம் இட்டளப்பட்டு சுழித்தாற் போலேயிருக்கிற இதினுடைய வைலக்ஷண்யம் கண்ட இவர்க்கு வாழ்த்தியல்லது நிற்கப் போகாதே. இதுதான் மடவார்களுந்திச் சுழியிலே சுழலுகிற மநஸ்ஸை மீட்டுத் தன்னிடத்திலே ஆழங்காற்படுத்தவற்றாயு மிருக்கும்.

அநந்தரம் திருநாபிக்கு மேலாய் விஶாலமாய் விமலமாய் ஸௌந்தரமாயிருக்கிற திருமார்பையும்

அத்தோடே சேர்ந்த திருயஜ்ஞோபவீதத்தையும் கண்டு காப்பிடுகிறார். (தூய்யமார்வும் புரிநூலும்) என்று. மார்வுக்குத் தூய்மையாவது ★ஹ்ருத,யேந உத்,வஹந் ஹரிம்★ என்று ★நெஞ்சத்துப் பேராது நிற்கும் பெருமானை★ உடைத்தாகை. அத்தாலே அவர்கள் ஹ்ருத,யம் ஸையம்யருபமாய் இருக்கும். அவ்வளவுமன்றியிலே ★மார்வமென்பதோர் கோயிலிலே மாதவன் என்னும் தெய்வம்★ என்கிறபடியே இவர் திருவுள்ளத்தைக் கோயிலாகக் கொண்டு ★அரவிந்தப் பாவையும் தானுமான சேர்த்தியுடனேயாய்த்து அவனெழுந்தருளி யிருப்பது. விசேஷித்து வக்ஷஸ்த,லம் மாத,வ ஸ்த,ாநமாகையாலே உள்ளோடு புறம்போடு வாசியற மாத,வன் உறையுமிடமாய்த்து. ★மங்க,ளம் மாத,வாராம மந: பத்,மாய மங்க,ளம்★ ★ஸ்ரீமத் ஸுந்த,ர ஜாமாத்ருமுநி மாநஸவாஸிநே ஸ்ரீநிவாஸாய★ என்றும் சொல்லக்கடவதிறே. அவன்றான் அநந்ய ப்ரயோஜந ருடைய ஹ்ருத,யங்களிலும் ஆசார்ய பரதந்த்ரருடைய ஹ்ருத,யங்களிலுமாய்த்து அத்யாத,ரத்துடனே எழுந்தருளியிருப்பது. ★விண்ணாட்டில் சால விரும்புமே வேறொன்றை யெண்ணாதார் நெஞ்சத்திருப்பு★[7] ★தன்னாரியன் பொருட்டாச்சங்கற்பஞ் செய்பவர் நெஞ்செந் நாளும் மாலுக்கிடம்★ என்னக் கடவதிறே. அந்த அநந்ய ப்ரயோஜநதையையும் ஆசார்ய பாரதந்த்ரதையையுமாய்த்து இங்குத் தூய்மையாகச் சொல்லுகிறது. அதுக்கு மேலே ★அழகாருமெதிராசர்க்கன்பு உடையான்★ என்னும்படி இவர் திருவுள்ளம் யதீந்த்,ரப்ராவண்யத்தை யுடைத்தா யிருக்கையாலே, ★இன்றவன் வந்திருப்பிடம் என்றன் இதயத்துள்ளே தனக்கு இன்புறவே★ என்கிறபடியே பரமஹம்ஸரான எம்பெருமானார் எழுந்தருளி யிருக்கிற மாநஸபக் மாஸந்தை உடையதாயுமிருக்கும். ராக,ாதி,

தூ₄ஷிதமான சித்தத்தில் அவன் அநாஸ்பதி₃யாயிருக்குமா போலே அங்க₃ராக₃ரஞ்ஜிதமான இவருடைய ஹ்ருதயத்திலும் ஆஸ்பதி₃யாயன்றியிரானாய்த்து. இப்படியிவன் எழுந்தருளியிருக்கையாலே ஸௌம்யஜாமாத்ருமுநியுடைய ஹ்ருத₃யம் அத்யந்த ஸௌம்யரூபமாயிருக்கும் என்கை. ஆகையால் ★நின் வலமார்பினில் வாழ்கின்ற மங்கையும் பல்லாண்டு★ என்கிறபடியே இவரும் இருவருமான சேர்த்திக்கு இருப்பிடமான திருமார்வைத் (துய்யமார்வும் புரிநூலும் வாழி) என்று மங்க₃ளாஶாஸநம் பண்ணுகிறாராகவுமாம். இவர் மாநஸவாஸியாயிருக்கிறவனும் ★புலம்புரி நூலவனிறே. ★அலர்மேல்மங்கையுறைமார்பன்★ என்கையாலே அம் மாவொருத்திக்கிடமுடைத்தாய்த்து அம்மார்வு. இம்மார்வு இருவர்க்கும் இடமுடைத்தா யிருக்கும். ★திருமாற்கரவு★ இத்யாதி. ★மங்க₃ளம் பந்நகே₃ந்த்₃ராய★★அனந்தனாமவரேமணவாளமாமுனி★(?) என்னக்கடவதிறே. அத₂வா (துய்ய மார்வும்) ★ஶுபே₄ந மநஸாத்₄யாதம்★ என்கிறபடியே ஆஶ்ரிதருடைய அபராத₄ங்களைப் பொறுத்து அவர்களுக்கெப்போது மொக்க நன்மையைச் சிந்திக்கிற ஸௌஹார்த₃த்தை உடைத்தாகை. ★உரஸா த₄ாராயாமாஸ★ என்றும் ★நன்னெஞ்சவன்னம்★[3] என்றும் சொல்லுகிறபடியே இவையிரண்டுக்கும் தானேயாயிருக்கை. (துய்யமார்பும்) ★ஏராரும்செய்யவடிவு★ என்னுமாபோலே இங்கும் யாவத் போகத்தைப் பற்றச் சொல்லவுமாம். ★மந்த₃ரகி₃ரி மதி₂த மஹார்ணவ உத்கீ₃ர்ணபே₂ந பிண்ட₃ பாண்ட₃ரஸுந்த₃ர ஸுகுமார தி₃வ்ய விக்₃ரஹ★ என்றிறே இருப்பது. ஆக இவற்றால் சொல்லிற்றாய்த்து ப₃ாஹ்யாப்₄யந்த்ர ஶுசி யென்கை. இனித் திருமார்வோடு சேர்ந்திறே திருயஜ்ஞோபவீதமிருப்பது. ★தாமரைத்தாரிடங்கொண்ட

மார்வும் வண் புரிநூலும்★ அப்படியோடே சேர்ந்த திருயஜ்ஞோபவீதம். படி = விக்ரஹம் (துய்ய மார்வும் புரிநூலும்) ★துஷாரகரகரநிகர விஶத, தர விமலோபவீத பரிஶோபித விஶால வக்ஷஸ்த₂ல★ என்கிறபடியே சந்த்₃ரனுக்குக் கிரணங்கள் தேஜஸ்கரமானாப் போலேயாய்த்து திருமார்வுக்குத் திருயஜ்ஞோபவீத மிருப்பது. ★சோபிதம் யஜ்ஞ ஸூத்ரேண★ என்னக் கடவதிறே. அன்றிக்கே இம் முந்நூலான மெய்ந்நூலாலே யிறே பொய்ந்நூல்களையும் கள்ள நூல்களையும் கருமமன்றென்று கழிப்பது. ★வகுளத₄ர த₄வளமாலா வக்ஷஸ்த₂லம் வேத₃பா₃ஹ்ய ப்ரவரஸமயவாதச்சே₂த₃நம்★ என்னக் கடவதிறே. தம்முடைய ப்₃ரஹ்மஸூத்ரத்தாலே யிறே இவனுடைய காமஸூத்ரங்களைக் கழிப்பது. ராஜேந்த்₃ர சோழனிலே பா₃ஹ்யருடைய ஸங்க₃த்தாலே ஶிக₂யஜ்ஞோபவீதங் களைக் கழித்த ப்₃ராஹ்மண புத்ரன் ஆழ்வானைக் கண்டு மீண்டும் அவற்றைத் த₄ரித்து வர, அவன் பிதாவானவன் ஆழ்வானைக் கண்டாயாகாதே என்றானிறே.

இனித் திருமார்வோடு சேர்ந்த திருத்தோள்களுக்கு அரண் செய்கிறார். (திருத் தோளிணை வாழியே) ★மல்லாண்ட திண்தோளுக்குப் பல்லாண்டு என்னுமா போலே. (சுந்தரத் திருத் தோளிணை) ★புஜத்₃வயவித்₄ருத விசத₃தர ஶங்கசக்ர★லாஞ்சனங்களை உடைத்தாயாய்த்துத் திருத்தோள்கள் இருப்பது. ★தோளார் சுடர்த் திகிரி சங்குடைய சுந்தரனிறே அவன்தான். ★சிங்காரமாலைத் திருத்தோள்களும் அதிலே திகழும் சங்காழியும்★ என்று அநுப₃ாவ்யமாயிறே இருப்பது. (தோளிணை) ★எப்போதும் கைகழலா நேமியான்★ என்கிறபடியே இவர்க்குத் திருத்தோள்களானவை எப்பொழுதும் சங்காழி இலங்கு புயமாயிருக்கையாலே ★வலத்துறையும்

சுடராழியும் பாஞ்சசன்னியமும்★இங்குமுண்டாயிருக்கை. அன்றிக்கே திருத்தோள்கள் தான் ப4க3வல்லாஞ்சனத்திவ் ப்ரமாணமுமாய் அபவித்ரரை ஸுபவித்ரராக்கியும் து3ர்வ்ருத்தரை வ்ருத்தவான்களாக்கியும் போருமதா யிருக்கும்.

அநந்தரம் திருத்தோள்களிலேகதேஶமான திருக் கையையும் அதிலே த4ரித்த த்ரித3ண்டத்தையும் கண்டு அதுக்குத் தாம் கடகாக நிற்கிறார். (கையும் ஏந்திய முக்கோலும் வாழியே) வெறுங்கை தானே போருமாய்த்து ஆகர்ஷிக்கைக்கு. அதிலே த்ரித3ண்டமுமானால் அழகிரட்டிக்கச் சொல்லவேண்டாவிறே. ★அங்கைத் தலத்திடை ஆழி கொண்டான்★ என்னுமாபோலே ★காரும் சுரபியும் போலே விளங்கு கைத்தாமரையிலே சேர்ந்திருந்த தண்டும்★ என்றிறே சேர்த்தியிருப்பது. இக் கை கண்ட இவரைக் கைவிட்டிருக்கமாட்டாரே. அன்றிக்கே ★முந்தைமறைத் தமிழ் விளக்கும் முத்திரைக் கை வாழியே★ என்கிறபடியே தனது தொண்டக்குலம் சூழவிருக்க அவர்களுக்குத் தமிழ் வேத3மான திருவாய்மொழியினுடைய வர்த்த2த்தை ஹஸ்த முத்3ரையாலே உபதேஶித்தருளுவதும் அநுப4ாவ்யமாயிறே [illegible]ருக்குமிவர்க்கு. ★உந்நித்3ரபத்3ம ஸுப4க3ாம் உபதே3ஶ மு[illegible]ராம்★ ★எழில் ஞான முத்திரை வாழியே★ என்று சொ[illegible]லக் கடவதிறே. (ஏந்திய) பூவேந்தினாற்போலே யிருக்[illegible]க. (கையுமேந்திய முக்கோலும் வாழியே) ★நின் [illegible] வேல் போற்றி★[6] என்னுமா போலே. அன்றிக்கே ★கம[illegible]ல வித்4ருத த்ரித3ண்ட3 த3ர்ஶநத்4ருத ஸமஸ்த பா[illegible]து3ாபரிஹ்ருத நிஜாவஸத★ என்று ஒருக் [illegible]ரையெல்லாம் ஓட்டுமதாயிருக்கும்.

([illegible] வாழியே) கண் [illegible]விட்[illegible]ர். ★கார்போலும் செங்கையுறை

முக்கோலும் வாழியே, கருணை குடிகொண்டருளும் கண்ணிணை வாழியே★ என்று திருக்கைக்கு அநந்தர ப4ாவியாய்ப் பேசுவது திருக்கண்களையிறே. திருக் கைகளினாலே ஸ்பர்ஶித்தருளின பின்பிறே திருக் கண்களாலே கடாக்ஷித்து ரக்ஷித்தருளுவது. (கருணை பொங்கிய கண்ணிணை) கருணைக் கடலான இவருடைய க்ருபை பெருகும் ஆனைத்தாள்கள் இருக்கிறபடி. ★நிரந்தர கருணாம்ருத தரங்கி3ணீபி4ரார்த்3ரிதாபாங்கை3ரநுகூல மபி4ஷிஞ்ச★ என்றாரிறே. இவரைப் போலே கண்ணுடையார் ஒருவரும் இல்லையே, இவர் கண்ணிறே எல்லார்க்கும் களைகண். கண்ணருளாலேயிறே எல்லாரையும் ரக்ஷித்தருளுவது. (கண்ணிணை) அலர்ந்த செவ்வித் தாமரைப் பூவிலே இரண்டு வண்டுகள் படிந்திருக்குமாபோலேயாய்த்துத் திருக்கண்களானவை திருமுக மண்டலத்துக்கும் கண்காட்டிகளாயிருக்கிறபடி. ★ஸ்மயமாந முகா2ம்போ4ஜம் த3யமாந த்3ருக3ஞ்சலம்★ என்கிறபடியிறே சேர்த்தி யிருப்பது. திருக்கண்களையருளிச் செய்தது உத்தமாங்க3த்தில் அழகுக்கெல்லாம் உபலக்ஷணம். ★வாழி செவ்வாய்★ என்றும், ★வார்காதும் திருநாமமணிநுதலும் வாழியே★ என்றும் அவற்றையும் திருநாமாந்தரங்களிலே காணலாயிருக்கும். அத்தாலே அவையிரண்டையும் மங்க3ளாஶாஸநம் பண்ணி யருளினார். இவர் ஜீயர் திருக்கண் மலரிலேயாய்த்து ஜிதம் என்று தம்மை எழுதிக் கொடுத்தது.

இவ்வளவும் ஸ்வரூபவைலக்ஷண்யத்தை அநுபவித்து மங்க3ளாஶாஸநம் பண்ணினவிவர் இனி ஸ்வரூப கு3ணமான ஜ்ஞான வைலக்ஷண்யத்தையும் அநுப4வித்து மங்க3ளாஶாஸநம் பண்ணுவாராக அதிலே இழிகிறார். கட்கணென்றும் உட்கணென்றும், ★நேத்ரேண ஜ்ஞாநேந★ என்றும் ஜ்ஞாந சக்ஷுஸ்ஸுக்கள் இரண்டுக்கும் த3ர்ஶநத்வம் ஒத்திருக்கையாலேயாக, சேர்த்தியுண்டிறே.

அத்தாலே (பொய்யிலாத மணவாளமாமுனி புந்தி) என்று ஜ்ஞானத்தைப் பேசுகிறார். புலன் - புந்தி - ஜ்ஞாநம். (பொய்யிலாத) இவர் விஷயத்திற் சொன்ன சொன்ன ஏற்றமெல்லாம் யத₂ார்த்தமாகவுண்டென்கை. இனிச் சொல்லமாட்டதார் குறையேயுள்ளது. அன்றிக்கே ஆஶ்ரிதரானவர்களுக்கு அஸத்வாதி தே₃ாஷங்கள் வராமல் நோக்கிப் போருகிறவர் என்னவுமாம். ★காமாதி₃ தே₃ாஷஹரம் ஆத்மபத₃ாஶ்ரிதாநாம்★ என்கிறபடியே ★செறிந்தவர்தமேதத்தை மாற்றுபவராயிருப்பர். (மணவாள மாமுனி) ரக்ஷகரன்றிக்கே யொழிந்தாலும் வடிவில் போ₄ாக்₃யதையும் திருநாம வைலக்ஷண்யமும் விடவொண்ணாதாயிருக்கை. பொய்யிலாமை புந்திக்கு விஶேஷணமாகவுமாம். அப்போது ★இராமானுசன் மெய்ம்மதிக்கடல்★ என்கிறபடியே ★உண்மை நன் ஞானமான் யதார்த்த ஜ்ஞானத்தை உடையவரென்கை. அதாவது ★மெய்ஞ்ஞான மின்றி வினையியல் பிறப்பழுந்தி★ என்கிறபடியே ஸம்ஸாரார்ணவ மக்₃நரானவர்களை ★ஞானக்கையாலே உத்₃த₄ரித்துப் போருமவரென்கை. சேதநர் படுமாபத்தைக் கண்டால் கையாலும் காலாலுமிறே இவர் எடுத்து ரக்ஷிப்பது. ★ஞானக்கை தந்து வந்தருளி எடுத்த புந்தி வாழி★. ஜ்ஞானப்ரத₃ாநர்களாயிறே இவர்களிருப்பது. ★தீ₄ப₄க்த்யாதி₃ கு₃ணார்ணவம்★ என்றும் புந்தி வாழி என்றும் அருளிச் செய்து போருகையாலே ஜ்ஞானம் ஸாரபூ₄த கு₃ணமாகையாலே அத்தை ப்ரத₄ாநமாகச் சொல்லக் கடவது. ★தத்ர ஸத்வம் நிர்மலத்வாத் ப்ரகாஶகம்★ என்கிறபடியே சுத்₃த₄ ஸத்வமயமான விக்₃ரஹமாகையாலே உள்ளிவ் ப்ரகாஶித்வ மென்னக்(உள்ளுள்ளவற்றை ப்ரகாஶிப்பிக்க?) கடவதிறே. புந்தியென்று ஜ்ஞாநமாத்ரத்தையுஞ் சொன்னது

ப4க்த்யாதி3களுக்கும் உபலக்ஷணம். ★மங்க3ளம் நிர்மல ஜ்ஞான ப4க்தி வைராக்3ய ராமபயே★ என்னக்கடவதிறே. (வாழி) மங்க3ளாஶாஸநம் பண்ணியருளினார். ஜ்ஞாந ப4க்த்யாதி3களிறே ஆத்மாலங்காரமா மென்பது. ★ஜ்ஞாந ப4க்த்யாதி3 பூ4ஷிதம்★ என்னுமாபோலே. அன்றிக்கே ஆசார்யனுக்கடையாளம் அறிவும் அநுஷ்டானமும் என்றும் ★ஞானமனுட்டான மிவை நன்றாகவே யுடையனான குரு★ என்றுமிறே ஆசார்யலக்ஷணமருளிச் செய்தது. ஆகையால் ஆஶ்ரிதருடைய அஜ்ஞானத்தைப் போக்கி ஸம்ப3ந்த4 ஜ்ஞானத்தை விளைவித்து கைங்கர்ய பர்யந்தமாக நடத்திக் கொண்டு போருவதெல்லாம் தம்முடைய ஜ்ஞாநாநுஷ்டானங்களாலே என்கை. (மணவாள மாமுனி புந்தி) என்கையால் இவருடைய ஜ்ஞாநம் அல்லாதாருடைய ஜ்ஞானத்திற் காட்டில் அத்யந்த விலக்ஷணமாய், தத்வத்ரயங்களையும் அலகலகாகக் காணவல்லதாய் ★தாமரையாள் கேள்வன் ஒருவனையே நோக்கும் உணர்வு★ என்கிறபடியே ஶ்ரிய:பதியை விஷயமாகவுடைத்தாய், அதுதான் ததீ3ய ஶேஷத்வமாகிற சரமாவதி யான எல்லை நிலத்திலே நிலைநின்று போருமதாயிருக்கும். தத்வத்ரயங்களோடு வசநபூ4ஷணங் கண்ட ஸகலசாஸ்த்ராசார்யரென்னக் கடவதிறே. ஆக, இவையெல்லா வற்றாலும் கீ3தையை அருளிய ★கண்ணனென்கோ★ என்னும்படி ★நிறைஞானத்தொரு மூர்த்தியான கீ3தோபநிஷத3ாசார்யனோடு விகல்பிக்கலாம் படி ஜ்ஞாந நிதி4யாயிருக்கிற இவருடைய ஜ்ஞானமானது கலிதோ3ஷம் தட்டாமல் நித்யமங்க3ள மாய்ச் செல்ல வேணுமென்று வாழ்த்தியருளினார் என்கை. கலிதோ3ஷத்தாலேயிறே சேதநருடைய ஜ்ஞாநம் அவ்பீப4வித்துப் போவது. இவர் . . . . பல்லவராயருக்கே கலிகண்டித்த திறல் வாழியே(?)★ என்னக்கடவதிறே.

கலிகன்றியான் அருளால் உயர்ந்தவரிறே இவர்தான். இனி இவர் இப்படித் தம்முடைய ஜ்ஞாநாநுஷ்டாநங் களாலே ஜ்ஞாந விப₄ாகமற ஸகல சேதநரையும் ரக்ஷித்துக் கொண்டு போருகையால் வந்த புகழைச் சொல்லுகிறது. ஞாலமுண்ட புகழ்போலே யிருப்பதொரு புகழாய்த்திது. தன்புகழ்நயவாருடைய புகழ்போற்றி இருக்கிறபடி. அதாவது ஜ்ஞாந வைப₄வத்தாலே வந்த புகழானது ★தொல்புகழ் சுடர்மிக்கெழுந்தது★ என்கிறபடியே நிரவதி₄கதேஜோரூபமாய் அப்ரதிஹதமாய் வாழவேணு மென்கை, புகழ் வாழி என்றவநந்தரம் வாழி என்றிரட்டிப்பாயிருக்கிறதுக்கு ப்ரயோஜநம் பல்லாண்டு பல்லாண்டென்கிறாராகவுமாம். அன்றிக்கே ★நீள் புவியில் தன்புகழை நிறுத்துமவன் வாழியே★[1] என்கிறபடியே கீழ்ச் சொன்ன யஶஸ்ஸுக்கு ஆதாரமாய் அநுக்தமான ஆத்ம ஸ்வரூப வைலக்ஷண்யமும் அநவரத ப₄ாவியாய்ச் செல்ல வேணுமென்று ஆஶாஸிக்கிறாராகவுமாம். அடியே தொடங்கி இதுவேயிறே இவர்க்கு யாத்ரை. இத்தால் சரம பர்வமான ஜீயர் விஷயத்தில் மங்க₃ளாஶாஸநமே அநுகூலரானவர்க்கு அநவரத கர்த்தவ்யமென்று அருளிச் செய்து தலைக்கட்டி அருளினாராய்த்து.

வாழி செந்தாமரைத்தாள் துவராடை மருங்கு கொப்பூழ்
வாழி முந்நூலுறைமார்பு முக்கோலங்கை வாழி திண்டோள்
வாழி செவ்வாய் விழி வாழி பொன்நாமம் மருவுநுதல்
வாழி பொற்கோயில் மணவாளமாமுனி வாழ்முடியே.[2]

**ஜீயர் திருவடிகளே ஶரணம்**